உ

ஸ்ரீ விநாயகர் துதி.

---

வெண்பா.

பொன்பூத்த கஞ்சப் புனற்றடக்‌ கரைக்குடபான்
மின்பூத்த சித்திமத வேழமே — அன்பூற்றுங்
கந்தர்திருக் கீர்த்தனத்தின் கட்டுரைக்கிங் கிட்டமதாய்
வந்துதவி செய்வாய் மகிழ்ந்து.

---

ஸ்ரீ சுப்பிரமண்யர் துதி.

---

விருத்தம்.

வானவ ரிடுக்கண் டீர்க்க மலர்ச்சர வணத்துட் டோன்றிச்
சேனைமா வீரர் சூழத் தென்றிருச் செந்தூர் மேவித்
தானவர் குலத்தை வாட்டத் தடக்கயில் வடிவேல் கொண்ட
ஞானசே கரனும் சாமி நாதன்பொற் பாதம் போற்றி.

வேறு.

வாய்ந்தவரைக் கிறைவரைத்தெய் வானைகுற மங்கையிரு வரைநான் மாலை
வேய்ந்தவரைச் சரணடைந்த விண்ணவரைப் புரந்துமற மிகுவெஞ் சூரைக்
காய்ந்தவரைக் கைலைவரைக் கடவுளர்க்குக் குரவனிச்சங் கத்தார் செஞ்சொல்
ஆய்ந்தவரைத் தண்கடம்பை அணிந்தவரைப்பணிந்துதுய ரனைத்துந் தீர்ப்பாம்.

---

அரன்றுதி.

---

திருமானைப் பிரிக்கவந்த செம்மானைக் கணைதொடுத்த சிமான் செல்வ
மருமானைத் தினைப்புனத்த மருமானை மணந்தான்றன் சரிதை கூற
இருமானைக் கரஞ்சிரங்கொண் டெழுமானை அதளுடுத்த எம்மான் கூடற்
பெருமானைக் கயற்கணிசேர் பெம்மானைச் சுந்தரனைப் பேசுவாமே.

---

அம்பிகை வணக்கம்.

கானவனைப் புணர்ந்தசெந்திற் கந்தனெழிற் கீர்த்தனத்தைக் கனிவாய்க் கூற
வானவனைப் பிறையணிநான் மாடக்கூ டற்கடவுள் மதிக்குஞ் சத்தி
ஆனவளைப் பாண்டிநன்று டாண்டவளைத் தமிழ்மாற னருளும் செல்வ
மீனவளை உளத்திலுன்னி வினைத்துயர்தீர்ந் தருட்செல்வ மிகுத்து வாழ்வாம்.

---

# மார்க்கண்டேயர் சரித்திரம்.

## காசிபமுனிவர் சூரபதுமன் முதலியோர்க்கு மார்க்கண்டரது வரலாற்றைக் கூறல்.

விருத்தம்.

தக்கமைந்தர் முகநோக்கிக் காசிபமா முனிநீங்கள் தடத்த மாகப்
பொக்கமின்றிச் சிவனடியி லுளஞ்செலுத்தி யுவந்துதவம் புரிந்தால் மோக்ஷம்
கைக்கனிபோ லுறுமெனக்குச் சகன்மரபின் மார்க்கண்டன் கதையை நன்று
யிச்சுரச மெனவிரித்துச் சாற்றுவான் செவிக்கினிதா யேற்று வானே. (க)

## மார்க்கண்டேயரது முன்னோர்கள் வரலாறு.

**தீபதை. இராகம் - ஸௌராஷ்ட்ரம்—ஆதிதாளம்.**

கடிமலர்ப்பொழில்சூழும் - வளமிகுந்த
கடகநகரில்வாழும் - செழும்
சடைமவுலியிற்கங்கை தரித்தருளிறையவன்
றனக்கன்புந்நிறைந்த குச்சகனென்றோர்மறையவன் (க)

இயற்றுந்தவத்திற்பிறந்தோன் - கவுச்சிக
னெனத்திருநாமஞ்சிறந்தோன் - தன்
வயிற்றின்பசிக்குணவும் உறக்கந்தனையுநீக்கி
மனக்கண்ணுலரன்றன்சொ ரூபத்தைக்கருதிநோக்கி (உ)

அருந்தவம்புரிதல்கண்டு - திருமண
வாளனங்குவகைகொண்டு - தவந்
திருந்துதாபதருக்கு ளுயர்ந்தவனீயேயென்று
சேயுன்பேர்மிருககண் - டேனெனநவின்று (௩)

சிவபரனருள்படைத்துத் - தனக்கிஷ்ட
சித்திப்பலனுங்கிடைத்து - செய்யுந்
தவநிலைமைபலித்துத் தழைக்கவரமளித்துச்
சாமளவண்ணன்செல்ல - மாமுனிவன்களித்து (௪

தந்தைசமுகநாடி - யங்குநடந்த
சரிதையையுரையாடி - நின்ற
மைந்தன்றனைத்துதித்து மார்போடணைத்துப்புல்லி
மாசின்மறைகளுட ஞசிவசனஞ்சொல்லி (ரு)

இனியென் மொழியையுணர்ந்து - இல்லறத்
தியல்புறமணம்புணர்ந்து - நமக்குற்ற
வினியவறுதொழிலை யியற்றிவருவாயென்று
இயம்பக்கவுச்சிகனு மயங்கிமனங்கனன்று (சு)

தவமகிமையைக்கெடுத்துப் - படுபா
தலநரகத்தில்விடுத்து - சுகம்போற்
கவைகொடுத்துத்தலைவெட் டிடும் பெண்கள்முகம்பாரேன்
கறைக்கண்டனருளன்றி மறுத்தொன்றையு நான்கோரேன் (எ)

என்றுமைந்தனுங்கூறிப் - பணிந்திட
வெழுந்துதந்தையுஞ்சீறி - யருள்
துன்றுந்தவத்தினுக்கில் லறமேநலமென்றுனே
தொட்டென்மேலாணையிட்டேன் - றட்டாதேநீயென்றுனே (அ) (க)

---

## கவுச்சிகர் இல்லறத்திற்குரிய பெண்ணின் இலக்ஷணம் கூறல்.

---

விருத்தம்.

சந்தமறை யந்தணன்மு னிந்நிலை மொழிந்திடத்
தனயனெதி ரடிவணங்கித்
தந்தைதாய் குருமொழித னைத்தடுப் பவர்சுருதி
சாற்றுமனு நீதிஞான
சாத்திர புராணபல நூலினைப் பொய்யெனவ
சங்கத மிசைக்குமூடர்
தாழ்விலா நரகத்து மூழ்குவர்க ளாதலாற்
றமியனு னென்றுபகர்வேன்
வெந்தழ லெனக்கடு கடுத்துமண வாளனை
வெகுண்டுபோ ராடல்புரிவோர்
வீடத னியற்கையை யிகழ்ச்சியா யயலிடம்
விளம்பிவசை யுறவிசைப்போர்

விருந்தினைக் கண்டுதலை வலியெனக் கணினீர்
விடுத்தழுது பரதவிப்போர்
விரிதலையர் செம்பட்டை மயிரினர்கள் கொட்டாவி
விட்டுவிர லினைநெறிப்போர்
சுந்தர மிகுந்தவ னெனப்பிறர்கள் கொழுநனைத்
துதிபுரிந் துரையாடுவோர்
துணைவிழி மருட்டியே கணிகைய ரெனத்தலை
துணுக்கொடு மினுக்குமிந்தத்
துர்க்குணம தில்லாத நற்குணங் களையுடைய
தோகையரி லொன்றுநேர்ந்தால்
சுபமங்க லம்புனைந் துலகியலில் வாழ்வது
சுதந்திரமெனப் புகலவே
யந்தநிமி டந்தனி லுவந்துகுச் சகமுனிவ
ஞராய்ந்து சோழநாட்டி
லண்டமத ளாவிஉளர் தண்டலை சிறந்தரு
ளநாமய மெனும்வனத்தி
லசத்தியமி லாமனவு சத்தியமு னிக்கொருபெ
ணங்கிருப் பதுதெரிந்தவ்
வாச்சிரம மதுதேடி வாச்சுதென மிகநாடி
யதிவிரைவி லணுகினனரோ. (உ)

## குச்சகர் அநாமயவனஞ்சென்று பெண் கேட்டலும் அங்கு நடந்த விருத்தாந்தமும்.

---

திபதை. இராகம் - சுருட்டி—ஆதிதாளம்.

திருமுனிவன் வரவு தெரிந்து - உசத்
தியமுனிவனும் பரவசமுட னுளம்பரிந்து
மருவுமணி யாசனத்திருத்திக் - கனி
வகையறுசுவைமுல்லை முகையமுதுடனருத்தி (க)

இங்கெழுந்தருளினதென்ன - வென்று
இயம்பிடலு மருமைப்புதல்வியெனு மெவ்வன்ன
மங்கையரசி தனையெமது - தவ
மைந்தன்றனக்குரிய மணப்புரிந்திடவுமது (உ)

சிந்தையென்னெனமெள்ள நயந்து - சொல்லச்
சிரமசைத் துசத்தியன்பரிவுடன் மிகவியந்து
இந்துசேகரன்றனைப்போலே - வந்திங்
கெனையொருபொருளென வினவினீரன்பாலே (ங)

இசைத்தமொழியைச் செவியோர்ந்தேன் - என்மூ
வேழுகுலமுங் கடைத்தேறியே களிகூர்ந்தேன்
உசத்தியனெனும் பெயர்மாக்ஷி - தன்க்
குமதுசம்மந்தம் பெற்றுலெமக்கு முண்டோதாழ்ச்சி (ச)

எனவுசத்தியனுபசரித்து - மண
மியற்றுவதற்குகந்த முகூர்த்தமதனைவரித்து
புனிதவம்முனியொடுவனத்தி - லின்பம்
பொருந்தியே விருந்துண்டங் கிருந்திடு மொருதினத்தில் (ரு)

தாயுரைகொண்டுவகைகூடிப் - பணி
தரித்துத்தோழியருடன் விருத்தையுமனநாடி
தூயமலர்த்தட நீராடி - வண்டு
சுழலுமலர்பறித்துச் சுரிகுழன்மிசைசூடி (சா)

மனைக்குத்திரும்பிவரும்போது - நடு
வழியிற்கொடியடர்ந்து படர்கடுவனமீது
கனத்தமலைகளைத்தூளாடி - மத
கரியொன்றெதிர் துரத்தவரிவையும் பயந்தோடி (எ)

ஆவியுடன் மேலாசை மறந்தாள் - அங்
காழ்ந்தபடுகிணற்றில் வீழ்ந்தவளுயிரிறந்தாள்
பாவையரழுதகன்றனரே - யோடிப்
பறந்துமங்கலையிடங் கரைந்திதை நவின்றனரே. (அ) (உ)

## விருத்தையின் உயிரைமீட்க குச்சகர் இயமனை நோக்கித் தவஞ்செய்தலும் பின் னடந்த விருத்தாந்தமும்.

### விருத்தம்.

விருத்தையின்செய் கையைக்கேட்டுத் தந்தை தாயும்
விதனமுற்றங் கோடிவந்து தூரவில் வீழ்ந்து
மரித்தபெண்ணை யெடுத்தலறிப் புலம்பும் போதில்
மாமுனிகுச் சகனமர்த்தித் தைல மீதி
விருத்திடச்செய் தெமராஜன் றன்னை நோக்கி
யினித்தவஞ்செய் திவளுயிரைத் தருவே னென்ன
வருத்தமுற்றுத் தவஞ்செயுங்குச் சகனை யந்த
மதகரிதோண் மிசையெடுத்திட் டகன்ற தன்றே. (க)

### பின்னும் விருத்தம்.

மத்தகசந் தோளின்மிசை யெடுத்துச் சென்றே
வனங்களொடு மலைகளெல்லாங் காலா லெற்றிக்
கைத்தலத்தா லடித்தடித்து நொறுக்கித் தூளாய்க்
காற்றிலெழச் சிதறியெழு முகிலைக் கோட்டாற்
குத்தியெறிந் துலவுமதி சயத்தை யந்தக்
குச்சகமா முனிவன்முனி வடங்கி நோக்கிப்
பத்திமிகு ஞானதிருஷ்டி யதனு லுள்ளம்
பரிந்திட்டா னதின்விவரந் தெரிந்திட் டானே. (௪)

---

## யானை வடிவமடைந்த தருமதத்தனது வரலாறு.

---

### திபதை. இம் - கலியாணி—அடதாளம்.

கலிங்கிலரி புரமென்றோர் தலத்தி - லுயர்
கனநிதிபடைத்த வணிகர்குலத்திற் - றன்மந்
துலங்குந்தேவதத்தனென்றொருசெட்டி - நாளுந்
தூயசத்திரமாலயமுங்கட்டி (க)

தத்துவச்சிவநெறியிற்சிறந்தான் - அவன்
றனக்குத்தருமதத்தமகன்பிறந்தான் - புவி
மெய்த்திடும் பருவவயதானன் - அன்னை
வீய்ந்தனள்பிறகு தந்தையும்போனன் (உ)

மடிந்தவர்க்குரிய கடனைமுடித்துத் - துக்க
வாரியிலாழ்ந்துதன் மதிமடித்துத் - தேக
மிடைந்தவன் மிகமயங்கிடும்பொழுது - பொல்லா
விரதவாதியொருவனுடன் முழுதும் (ங)

உத்தமமான விபூதியுந்தரித்துக் - காவி
யுடையுமணிந்து செழுஞ்சடைவிரித்துத் - தோளிற்
பத்திசேர்கண்டிகையணிபதித்துச் - சிவ
பத்தனைப்போலஞ்சக்கரந்துதித்து (௪)

பொய்த்திடுந்தவவேடமதுபுனைந்து - செட்டி
புதல்வனைக்குடிகெடுத்திட நினைந்து - நேரிற்
றத்தரமுடனவன் மனைபுகுந்தான் - அந்தத்
தருமதத்தனுங்கண்டு களிமிகுந்தான் (ரு)

நற்பதுமாசனந்தனிலிருத்தித் - தாளில்
நறுமலர்தூவியின்னமுதருத்தி - யிரு
பொற்பதந்தனைப் பணிந்தெழுந்து நின்றான் - வந்த
புதுமையையடியேனுக் கருளுமென்றான் (சு)

பொய்க்குரவனுமவன்முகநோக்கி - யொரு
பொன்னைப்பற்பலகோடி பொன்னாக்கி - நேரில்
வைக்குந்தொழிலுமென் றனிடத்திலுண்டு - உன்கை
வசமுற்றபொருளினை விரைவிற்கொண்டு (எ)

என்னிடங்கொடுத்துவிட்டாலுடனே - செம்பொன்
இரவிபோற்றருவதுமென்கடனே - யாரு
மென்னவந்தப்புரட்டன்வழுத்துஞ்சொல்லை - நிச
மெனவணிகன்கேட் டகங்கொழுத்து (அ)

முன்செய்ததீவினைப்பயன்மீறி - வரு
மோசப்பேராசைப் பேய்தலைக்கேறி - முன்னந்
தன்வசத்திருந்த சொத்தையுமழித்துப் - பின்னுந்
தர்மப்பொருள்க ளனைத்தையுமொழித்து (கூ)

செய்யமகவமுதைக் கையாலே - யொன்றாய்த்
திரட்டிநாய்தனக் கீந்தகதைபோலே - யந்த
வெய்யபாதகன்கையிற்கொடுத்தானே - வாதி
மெய்த்தவன்மனைக்குட்போயடுத்தானே. (ய) (கூ)

---

விருத்தம்.

தந்திர மாக மனையறை புகுந்து
தருமதத் தனைமதி மயக்கித்
தமனிய மனைத்துங் கவர்ந்தவன் முன்பாய்த்
தலமிசைக் காட்டெரு வடுக்கி
விந்தையோ டென்கைக் கருவினை யூட்டி
விதிமுறை புடத்தில்வைத் தெடுக்கில்
மிக்கபொற் குவைகள் சிக்கெனப் பலிக்கு
மெனப்பயில் பலமுறை காட்டி
மந்திர மொழிந்து குகையினிற் செம்பொன்
வளமுடன் வைத்தழன் மூட்டி
மண்டுவெம் புகையால் வணிகனு மயங்கி
மழையென விழிப்புன லருவி

சிந்திடச் செய்து திருடனக் கணத்திற்
செம்பொனின் குவையினை யெடுத்துத்
திடுக்கென மறைத்திட் டயத்தையக் குகையிற்
செலுத்தியே கனலிடென் றனனே. (ரு)

---

பின்னும் விருத்தம்

வேறு.

கனலையிட்டுத் தருமதத்தன் றனைத்தெளிவித் தென்றனைநீ கருதி யந்தக்
கரணமுடன் றுதிபுரிந்திக் குகையதனின் மூன்றுதினங் கனலை மூட்டி
யனலவித்துக் குகைதிறந்தா லளவிறந்த பொற்குவையுண் டாகு நான்போ
யரிமாலூர் தியைத்தொழுதுன் றனக்குவரமளிப்பேனென் றகன்றனப்பா
லினிதுடனம் மூன்றுதினங் கழிந்தபின்பு வணிகனதை யெடுத்துப் பார்க்க
இரும்புபெருங் கருமலைபோ லிருந்ததுகண் டேங்கியவ னிறந்தா னன்று
மனதறிந்து தருமசொத்தைக் கெடுத்ததினு லிம்மதமா வானு னென்று
மதித்ததற்கம் முனிபுரிந்த தவத்திலொரு நாட்டவத்தை வழங்கி னானே. (சு)

---

## தருமதத்தனது சாபவிமோசனமும் விருத்தை பிழைத்தெழுதலும் அவள் விவாகமும்.

---

தீபதை. இராகம் - மூகாரி—ரூபகதாளம்.

உவந்து முனியால் வணிகனுங்கரி யுருவம் போகியே - விடை
யுடையவனருள் சிறந்துடன் றெய்வவடிவமாகியே
கவிந்து முனியைப்பணிந்தெழுந் துள்ளங் களித்துலாவினன் - றேவர்
கற்பகமலர் பொழிந்திடப்பர கதியைமேவினன். (க)

தருமதத்தன் செல் பெருமையை யதிசயித்துத்தெரிந்தனன் - முனி
தருமராஜனைக்கருதியே பின்னுந்தவத்தைப்புரிந்தனன்
எருமைவாகனக்கடவுளம் முனிக்கெதிர் வந்தடுத்தனன் - மிக்க
வியல்புடனுள்ளமிரங்கி விருத்தைக்குயிருங்கொடுத்தனன். (உ)

உசத்தியனதை யறிந்தெழுந்து தன்னுள்ளங்களித்தனன் - பூரித்
துடல்புளகித மாகியுவகைக்கடலிற்குளித்தனன்
இசைச்சுமங்கலை சகிப்பெண்களுடனெழுந் தங்குதித்தனள் பிழைத்
தெழுந்தபெண்ணைக்கண் டிரக்கமுற்றுட னின்பங்கதித்தனள் (ஙூ)

துதித்துவந்துகுச் சகமுனிவனைச்சூழ்ந்து பணிந்தனள் - பெண்ணைத்
துணைக்கையாலெடுத் தணைத்துப்பணிகள் துலங்கவணிந்தனள்
மதித்தநாமய வன்த்துளோரெலா மகிழ்ந்து கூடினார் - முனி
வனைப்பரசிவனெனச்சொலி வெகுவாய்க்கொண்டாடினார். (௪)

விருத்தையைக்கவுச்சி கற்குக்கொடுக்க விருப்பமிகுந்துதன் - பதி
விருதைச்சுமங்கலையுடனு சத்தியனுரைகள்பகர்ந்தனன்
கருத்தொடுமன்ற லோலையவர்க்குக் கடிதில்விடுத்தனன் - அந்தக்
கணத்தநாமய வனத்திலவனும் களிகொண்டடுத்தனன். (௫)

கடிகுழல்விருத்தையைக் கவுச்சிகன் கைக்கொண்டுகந்தனன் - தந்தை
கனகவெற்புறக்கடகமா நகர்கலந்து திகழ்ந்தனன்
உடலு முயிரும் போலிருவரு முற்று முயங்கினார் - நல
முடன் மிருகண்டன் றனைப்பெற்றானந்தவுததிவயங்கினார். (௬) (௪)

---

விருத்தம்.

சொற்கலையைந் தாண்டின்மைந்த னுணர்ந்த பின்பு
தூயமுனி யுபநயந மியற்றி யப்பால்
முற்கலன்பெண் மருத்வதியைத் திருக்கல் யாண
முடித்துடனவ் விருவருநற் றவத்திற் சென்றார்
நற்கலைபூண் டுடன்மருத்து வதியுந் தானும்
வாரணா சியையடைந்து மகவை வேண்டி
பொற்கலைமா மதிபுனைந்த சிவன்பா லன்பு
பொருந்திட்டார் தவநெறியி லிருந்திட் டாரே. (௭)

---

## மிருகண்டுமுனிவர் புத்திரனை வேண்டி வாரணாசியில் தவஞ்செய்தல்.

---

**கீர்த்தனம். இராகம் - சங்கராபரணம்—ரூபக்தாளம்.**

பல்லவி.

அருந்தவம்புரிந்தார் - துன்பப்
பெரும்பவம் பிரிந்தார்.

அநுபல்லவி.

அருந்தவம் புரிந்தனர் மிருகண்டர்
ஆரணந்துதித்திடுநதி - வாரணாசிநற்றலமதில் (அருந்)

சரணங்கள்.

1. கரமிசைகுசைமுடி புனைந்து
கண்டிகை பூதியு மணிந்து
வரியுரியதழ்மிசை யிருந்து
மறைமுதன் மனுமுறை மொழிந்து (அருந்)

2. அகமுறும் அறுபகை போக்கி
ஐம்பொறி புலன்களை வீக்கி
திகமுள மறிவது சிறந்து
செகமெனு மயலது மறந்து (அருந்)

3. அத்துவிதத்தி லமுந்தி
அன்புற்றொருமை பொருந்தி
சித்தமதி லுவகை மிகுந்து
சிவபர னருள்தனை நினைந்து (அருந்) (ரு)

## பரமசிவன் பிரத்யக்ஷமாகி யென்னவரம் வேண்டுமெனவினவல்.

விருத்தம்.

சிந்தைதனை யடக்கியிந்தப் படிக்கோ ராண்டு
திருமணிக்கர் ணிகையெனுமத் தலத்தி லோர்பா
லந்தமுடன் றவஞ்செயல்கண் டுமையோ டேற்றி
னமர்ந்துடனங் கெழுந்துவந்த சிவனே நேரிற்
சந்தமறை யாற்றுதித்துப் பரமா நந்தச்
சமுத்திரத்தி லாழ்ந்துபர வசமாய் நிற்கு
மந்தணனை நோக்கியென்ன வரங்கள் வேண்டு
மதைநன்றாய் நமதுமுன்ன மிசை யென்றாரே. (அ)

## மிருகண்டு ஸத்புத்ரசந்ததியைக்கோர, ஈசரீந்தருள, மார்க்கண்டர் அவதரித்து வளர்தல்.

தீபகை. இராகம் - கேதாரகௌளம்—ஆதி.

இசையென்றருள்புரிந்த பசுபதியின் பொன்மல
ரிணையடியை முடியிற்சூடியே - மிகு
உசிதமாகிய நவ ரசகன நயத்துட
னுவந்து முனிவனுரையாடியே (க)

அந்தரியாமியாய் நிறைந்து மென்கருத்தை நீ
யறியாதவகையுண்டோ தெரிவாயே - உன்றன்
சிந்தைமகிழ்ந்தினிய சந்ததி தழைத்திடத்
திருமைந்தனெனக்கருள் புரிவாயே (உ)

என்றுமுனிவன்சொல்ல மன்றில் நடம்புரியு
மிறைவன் மிகவுங்களி கூர்ந்துதன் - அருள்
துன்றுமிவன்பத்தியை யின்றெவர்களுங் காணச்
சோதித்திடவேண்டுமென் றோர்ந்துடன் (ந)

ஏற்குங்குணங்களின்றித் தீக்குணங்கள்பிணிகள்
இழிந்தகூன்குருடசடாகியும் - சன்
மார்க்கசிவபத்தியின் றீர்க்கவறிவில்லாத
வன்கண்மையுடன் கசடாகியும் (ச)

மாறுகொள்வடிவுடன் நூறுவயதுடைய
மைந்தன்வேணுமோ சிவஞானமும் - சுவை
யூறுஞ்சதுர்வேதமு மாறுபத்துடனேநான்
குற்றசகலகலைக் ஞானமும் (ரு)

புந்தியினிலெனது சிந்தனையேதவமாய்ப்
பூசனைபுரிந்திடுஞ்சாதுவாய் - நாளும்
வந்தனைபுரிகின்ற வயதுபதினாறுற்ற
மைந்தன்வேணுமோ தெளிந்தோதுவாய் (சு)

எனப்பரமன்புகல்வ சனத்தைமுனிவன்செவி
ஏற்றிதற்கென்விடையென்றெண்ணியே - பின்பு
மனத்திடத்துடனேநல் வினைப்பயனெதிர்கொள்ள
மதித்திட்டாலோசனைபண்ணியே. (எ) (சு)

---

## விருத்தம்.

மதத்துடன் சிவனை மறந்தவ ருசித
மார்க்க மில்லாத நிர்மூடர்
வயதுநூ றுடையா ராயினும் புவியில்
மங்கியே சடுதியில் நசிப்பார்
இதத்துட னேம நிஷ்டையிற் சிறந்தே
யிடைவிடா துள்ளமோ டுருகி
யெழுதரு மறைநூ லாகமப் படிக்கின்
னிசையொடும் பூசனை புரிவோர்

விதித்திடும் வயது குறையினு நன்மை
மிகுதியா லாயுள் பெற்றோங்கி
மேன்மையுற் றிடுவ ராதலா லுன்றன்
விரைமலர்ப் பதத்தின்மீ தன்பு
கதித்திடும் புதல்வ னளித்தெனைக் காக்கக்
கடவையென் றுரைத்தலும் பரமன்
கருத்தினி லுகந்தம் முனிக்கொரு மகவைக்
கருணைகூர்ந் தளித்தகன் றனனே. (௧)

**தீபதை. இராகம் - எதுகுலகாம்போதி—அடதாளம்.**

வரம்பெற்றரன்கருணை - யுரம்பெற்றுமருத்வதி
மானாள் - கர்ப்ப - மானாள் - வசி
கரம்பெற்று மதிக்கொரு - நிறம்பெற்றொளி சிறந்து
கதித்தனள் - உள்ளன் - புதித்தனள். (௧)

மதிக்கனையவதனம் - பசத்து மூன்று திங்களில்
மசக்கையால் - அன்னங் - கசக்கையால் - நன்றாய்த்
திதிக்கும்பாலமுதூட்ட - மருட்டிக்குமட்டிமதி
தியங்குவாள் - மேனி - கயங்குவாள். (௨)

கனத்துப்பணைத்தெழுந்த - தனத்துமணியிரண்டுங்
கறுத்தனள் - அரு - வருத்தனள் - தாய்
மனைக்குளைந்துதிங்களி - லழைத்துப்பொன்வளைகாப்பு
மாட்டினர் - கலன் - பூட்டினர். (௩)

சட்டமோடறுதிங்கட் - குரியதியற்றிமலர்
சாற்றினர் - உவந் - தேத்தினர் - மதி
யெட்டிற்பூரிகமடி கட்டி மணையின்மிசை
யேற்றினர் - பேணிப் - போற்றினர். (௪)

ஐந்திருமதியுநி - றைந்துபூரணகெர்ப்பா
வதியுற்றாள் - நன்கு - வதியுற்றாள் - அர
விந்தமனையமுக - முந்தளிர்த்தரளம்போல்
வியர்வுற்றாள் - தளர்ந் - தயர்வுற்றாள். (௫)

இரவிதகரின்மன்ன - குருவும்புகருமுச்ச
மேறவும் - பல - மூறவும் - பின்னும்
மருவுமறுகோள்களு முரியசுபக்ரகத்தில்
வதிக்கவும் - நல - முதிக்கவும். (௬)

(15100)

புதனுக்கினிமையுற்ற - மிதுனலக்கினம்வந்து
பொருந்தவும் - கலை - திருந்தவும் - சிலை
மதனுக்கிணையவொரு - சுதனைப்பெற்றனள்முக
மதியினாள் - மருத் - வதியினாள். (எ)

தந்தைமிருகண்டரா - நந்தமெனுங்கடலிற்
றாழ்ந்தனர் - தீதைப் - போழ்ந்தனர் - உடன்
சிந்தையன்பொடுமறை - யந்தணரனைவர்க்குந்
தெரிவித்தார் - நேரில் - வருவித்தார். (அ)

கலவைப்பொடிகதம்பப் - பொடிகள் சந்தனமொடு
கரைத்தனர் - வாரி - யிறைத்தனர் - செந்நெல்
நிலமணிநிரை செம்பொன் - சலவைசோடசதானம்
நேர்ந்தனர் - அன்போ - டீந்தனர். (கூ)

உவக்குங்கலையனைத்துந் - திரட்டிச்சேனைமைந்தனுக்
கூட்டினார் - நன்னீ - ராட்டினார் - செங்கை
குவித்துநவதினத்திற் - குலதெய்வங்களைச்சொல்லிக்
கூப்பிட்டார் - வேண்டிக் - காப்பிட்டார். (ய)

செனித்ததன்பதினொரு - தினத்திற்சாதகர்மமுஞ்
செய்தனர் - வியப் - பெய்தனர் - எழி
லினப்பொற்பணிகளலங் கரித்து மணித்தொட்டிலி
லேற்றினார் கண்ணா - ரூற்றினார். (கக)

மார்க்கண்ட னெனவயன் - றீர்க்கமுடனேநாமம்
வைத்தனன் - கண்டு - மெய்த்தனன் - சன்
மார்க்கமுடனே மூன்று - வயதிற்சௌள மணம்
வரித்தனர் - சிகை - தரித்தனர். (கஉ)

ஐந்துவயதிலக்ஷ - ராரம்பஞ்செய்து சீ
ராட்டினார் - இசை - நாட்டினார் - பின்னும்
மூந்தும் வயதேழில - மைந்தபூணூல் மணம்
முடித்தனர் - வாழி - படித்தனர். (கங) (எ)

## மார்க்கண்டருக்குப் பதினாறுமாண்டு நெருங்குதல்கண்டு மிருகண்டுமுனி விதனமுறல்.

---

விருத்தம்.

கருத்திலுவந் துபநயன முடித்த பின்பு
கலைகள்மறை யாவுமைந்தன் கற்றா ராய்ந்து
திருத்தனரு ளியவயதிற் பதினோந் தாண்டு
நிறைந்துபதி னாறுண்டு நெருங்கக் கண்டு

திருக்குமரன் வடிவையுஞ்செய் கையையு நோக்கிச்
சிந்தைமிகத் தளர்ந்துமிரு கண்டன் றானும்
வருத்தமுற்றுப் புகலினிவே றொன்றுங் காணு
வகையுற்றான் மிகவுமதி திகையுற்றானே. (ம)

---

**கீர்த்தனம் இராகம் ஆகிரி—திரிபுடை தாளம்.**

பல்லவி.

என்னசெய்வேன் - இந்தவிதிக்
கெப்படி உய்வேன்.

அநுபல்லவி.

தன்னெஞ்சறியாவிதற்கோர்
தந்திரமொன்றுங்காணேனே. (என்ன)

சரணங்கள்.

வாரணாசிதனிற்சென்று வருந்தித்தவமுயன்று
ஆரணப்பொருள்தனைக்கண் டடிபணிந்து
பூரணவயதுள்ளஸத் புத்திரன்றனை நீர்வரம்
தாருமென்றுரையாடாமல் தவறிமோசம்போனேனே. (என்ன) (க)

குளிர்ப்பாயின்னமுதூட்டிக் - குலமணிக்கலன்பூட்டி
வளர்த்துக்கலைதேர்ந்தயௌ - வனவயதில்
தளிர்ப்பொன்மேனியுங்குஞ்சிச் சடையும் நடையுங்கண்டு
களித்த கண்ணைக்கிளறக்கடவுள் சோதனைசெய்தால் (என்ன) (உ)

அருணோதயத்திலேகி ஆர்ந்தநதியில் மூழ்கிச்
சுருதியோடனுட்டானத் தொழில் முடித்துக்
கருதிப்பூசைபுரிந்து கடவுட்கடிமையான
திருமைந்தனுக்கிறுதி தீவரமாகநேர்ந்தால். (என்ன) (ங) (அ)

---

## மேற்கூறிய காரணத்தால் மருத்வதி புலம்பல்.

---

**வெண்பா.**

கம்பலையி லாழ்ந்துமிரு கண்டமுனி யிந்தவிதந்
துன்பமுறல் கண்டு துடிதுடித்தே - வெம்பிக்
கருத்துதிரஞ் சோரவிரு கண்ணருவி சார
மருத்வதிமி னள்புலம்பு வாள். (க)

**கீர்த்தனம் இராகம் - நீலாம்புரி—ரூபகதாளம்.**

**பல்லவி.**

அருமைமைந் தா உனைப்பிரிந் தாலெந்தவிதம் சகிப்பேன் - இந்த
அனியாயத்தை யாருடன்சொல்லித் தேரிநிர்வகிப்பேன் - என் அருமை.

**அனுபல்லவி.**

பரமசிவனைக் கருதிச்சுருதி பகர்ந்தருந்தவம்புரிந்து நிறைந்த
பத்து மாதம் சுமந்துனைப்பெற்று நான் பாரித்துடலம் பூரித்திருந்தேனடா
[என் அருமை.

**சரணம்.**

திதிக்கும்பாலுடன முதுமருத்தித்
திருமுகத்தொளிதிருத்தி - நிறை
மதிக்கொருவண்ணமாகமடியில்
வைத்தணைத்துன்றனை நித்தம்வளர்த்தேனடா. (என் அருமை) (க)

புணரியைக்கடைந் தமுதங்கண்டவர்
போலுனைக்கண்டு மகிழ்ந்தேன் - செந்
தணல் விழிச்சமன் முனிவுகொண்டுன்னைத்
தடுத்திழுக்கும் நாளடுத்ததே ஐயையோ. (என் அருமை) (உ) (கூ)

## மார்க்கண்டேயர் தாய்தந்தையர்களைத் தேற்றுதல்.

**விருத்தம்.**

தந்தைதா யிருவர்களுந் தயங்கும்போதிற்
றனையனவ ரடிபணிந்திட் டெழுந்துநின்றே
அந்தோஎன் னையாஎன் னனையே உங்கட்
காகுலமே தெனப்பகர்ந்த சுதனைக்கையாற்
சிந்தையன்போ டணைத்துமுச்சி முகந்து முன்னாட்
சிவனளித்த வரமிதென நவிலக்கேட்ட
மைந்தனிள நகைமுகங்கொண் டிதற் கோவிந்த
மலைவென்பான் வீணிலென்க வலையென்பானே. (கக)

**வெண்பா.**

துஞ்சிடுவான் மைந்தனென்று துன்பமுற்று ளங்கலங்கி
யஞ்சுவதேனென்மொழியை யாய்ந்தருள்வீர் ! செஞ்சடையின்
மத்தருக்கோ டக்கணிந்த வன்பதத்தி லன்புகந்த
மூத்தருக்க வத்தைவரு மோ. (உ)

**கீர்த்தனம். இராகம் - சகானு—ஆதிதாளம்.**

பல்லவி.

சிவனை நினைந்தவர் எவர்தாழ்ந்தார் - ஸதா
சிவனை மறந்தவர் எவர்வாழ்ந்தார்.

அனுபல்லவி.

மவுனசித்தர்கள்முதற் சனகமுனிவர்கள்தன்
வசத்திலனுதினமும் வசித்தருளும்பரம. (சிவனை) (க)

சரணங்கள்.

மனப்பயங்கரங்கொண்டமரர்வெருண்டு - விழ
மருட்டிவந்த விடத்தைத் திரட்டிஉண்டு - வெம்பிக்
கனைத்தலறியதெய்வகன்னியர்கள்திருமங்
கலத்தைக்கந்தரமிசை நிலைக்கச்செய்தருள் பர. (சிவனை) (உ)

சிரித்துத்திரிபுரத்தை எரித்தழித்தும் - தக்கன்
சிரத்தையறுத்திட்டழல் தனிலொழித்தும் - அகங்
கரித்துமுனிவர்விட்ட வரிப்புலியைக்கொன்றத
ளுரித்திடையிற்றரித்த நிருத்தனெனும் பரம. (சிவனை) (ங)

இருப்புத்தம்பத்தைச்சித றரித்திடுமோ நெருப்
பிடையிற்புழுவந்துயிர் தரித்திடுமோ - மன
வருத்தமின்றிக் கண்மலர் பறித்துப்பூசனைசெய்த
மாலுக்குநேமிதந்து பாலித்தருள்புரிந்த. (சிவனை) (ச) (ம)

---

## மார்க்கண்டேயர் காசிசென்று சிவனை ஆராதித்தல்.

**விருத்தம்.**

அந்திவண்ணன் றனையடுத்துப் பூசை செய்திங்
கழியாத வரம்பெற்று வருவேனீங்கள்
சிந்தைகலங் கிடவேண்டா மெனப்பகர்ந்த
சேயனைக்கை யாற்றழுவித் திருநீறிட்ட
தந்தைதா யடிபணிந்து விடைபெற் றேகிச்
சங்குலவு கங்கைதனிற் ருனஞ் செய்து
நந்திவா கனவிசுவே சனைப்பூ சிக்க
கலஞ்செய்தான் சந்நிதிமூ வலஞ்செய்தானே. (கஉ)

பின்னும் விருத்தம்.

இறையவனை வலஞ்சூழ்ந்து சிவனே நானிங்
கியற்றிடும்பூ சனைக்கொன் றுங் குறைவுறாம
னிறைவேறும் படிகருணை புரிவா யென்று
நின்மலன்றன் கோயில்தென்பா லொருபாகத்தில்
முறைவழியோ ரமிர்தலிங்க ப்ரதிஷ்டை செய்து
மொழிந்திடுஞ்சி வாகமத்தின் படிக்கு நன்றாய்த்
தறுகணமன் றனைச்செயிக்கக் கருதியாரா
தனஞ்செய்தான் பக்திசா தனஞ் செய்தானே. (கங)

ஆர்யா—இராகம் பியாக்—ஆதிதாளம்.

𑍐 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌶𑌶𑌿𑌶𑍇𑌖𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐.
𑌭𑌵𑌾𑌯 𑌗𑍁𑌣𑌸𑌂𑌭𑌵𑌾𑌯. 𑌶𑌿𑌵𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐.
𑍐 𑌹𑌰𑌾𑌯 𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰𑌾𑌯 𑌵𑌿𑌷𑌕𑌂𑌠𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐.
𑌵𑌰𑌾𑌯 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑌾𑌂𑌦𑍍𑌰𑌾𑌯 𑌗𑌜𑌸𑌾𑌂𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐.
𑌜𑌿𑌤𑌾𑌯 𑌗𑍁𑌣𑌰𑌂𑌜𑌿𑌤𑌾𑌯 𑌸𑍁𑌨𑌿𑌬𑌂𑌧𑌿𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐.
𑌮𑌹𑌿𑌤𑌾𑌯 𑌹𑌰𑌿𑌸𑌨𑍍𑌨𑍁𑌤𑌾𑌯 𑌸𑍁𑌰𑌵𑌾𑌂𑌛𑌿𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃 𑍐. (கக)

---

## பரமசிவன் மார்க்கண்டருக்குப் பிரத்யக்ஷமானவுடன் மார்க்கண்டேயர் சிவனைத் துதித்தல்.

---

விருத்தம்.

அங்கம்வா யகமொருமை யுடனே பூசித்
தைந்தெழுத்தை யுருவேற்றித் தியானஞ் செய்யுந்
துங்கமைந்தன் மெய்யுழுவற் கனுகனுகி
ஸோமசடா தரனுவந்து கருணை கூர்ந்து
மங்கையுமை யவளொடுமால் விடையிலேறி
வருதல்கண்டு மார்க்கண்ட முனிவனேரிற்
கங்குகரைக் கடங்காத பரமா நந்தங்
கதிக்கின்றான் முழுமறையாற் றுதிக்கின்றானே. (கச)

கீர்த்தனம் சங்கராபரணம—ரூபக்தாளம.

𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰 𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰 𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰 𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰
𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰 𑌶𑌿𑌵𑌶𑌂𑌕𑌰 𑌵𑌰𑌦𑍇𑌶𑌦𑌯𑌾𑌹𑍋. (1)
𑌕𑌾𑌰𑍁𑌣𑌾𑌕𑌰 𑌸𑌾𑌰𑌨𑌾𑌯𑌕 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌯𑌕 𑌶𑌿𑌵 (2)
𑌨𑌿𑌜𑌸𑌜𑍍𑌜𑌨𑌪𑌰𑌿𑌪𑌾𑌲 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌵𑌿𑌨𑍋𑌦 𑌶𑌿𑌵 (3)
𑌕𑌰𑌧𑍃𑌤𑌸𑌾𑌰𑌙𑍍𑌗𑌵𑌾𑌹 𑌗𑌰𑍍𑌵𑌕𑌂𑌧𑌰 𑌮𑌣𑌿𑌭𑌾𑌹 𑌶𑌿𑌵 (4)
𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲𑌕𑌸𑌂𑌕𑌾𑌶 𑌶𑌾𑌰𑍍𑌦𑍂𑌲𑌕𑌿𑌰𑍀𑌟𑌸𑌨𑌿𑌵𑍇𑌶 𑌶𑌿𑌵 (5)
𑌨𑌿𑌗𑌮𑌾𑌗𑌮𑌸𑌂𑌚𑌾𑌰 𑌨𑌿𑌰𑍁𑌪𑌮𑌗𑍁𑌣𑌪𑌰𑌿𑌵𑌾𑌰 𑌶𑌿𑌵 (6)
𑌜𑌟𑌿𑌲𑌸𑌂𑌗𑌰𑌸𑍂𑌯𑌸𑌹𑌾𑌷 𑌶𑍍𑌰𑌿𑌤𑌜𑌨𑌤𑌾𑌪𑌨𑌿𑌜𑌜𑌨𑌪𑍋𑌷 (7)

(கஉ)

---

## மறலியைச் செயிக்க விரும்பிய மார்க்கண்டருக்கு ஈசன் அபய மளித்துத் திருவடிதீக்ஷை செய்தபிறகு மார்க்கண்டேயர் அனேக தலங்கள் தெரிசித்துப் பிறகு திருக்கடவூர் வந்து ஈசனைப் பூசை புரிதல்.

---

விருத்தம்.

சுருதியோ டிசையாற் றோத்திரம் பயின்ற
சுந்தரப் புதல்வன்மீ தன்பு
தோய்ந்துநின் றனக்கு வேண்டிய வரத்தைத்
துலக்குமா யெனக்குறை யென்னப்
பரிவொடு வணங்கி மறலியைச் செயித்துப்
பாரிடத் தழிவிலா வரமும்
படைத்துன தரிய பதமல ரிணையைப்
பண்புடன் பூசனை புரிய
வருள்புரி வாயென் றுரைத்திடப் பரம
னஞ்சலென் சலெயெனக் களிப்போ
டபயமுங் கொடுத்து முடிமிசை தனிற்பொன்
னடியிணைக் கமலமுஞ் சூட்டித்
திருவுரு மறையச் சிவதலந் தோறுஞ்
சென்றுபூ சனைபுரிந் தப்பாற்
றிருக்கட வூர்சென் றமிர்த லிங்கத்தைச்
சிறப்பொடு பூசைசெய் தனனே. (கங)

---

**கீர்த்தனம் இராகம் - தன்யாசி—ரூபகதாளம்.**

**பல்லவி.**

விக்ரமமார்க் - கண்டன் சிவனை
விரும்பிப் பூசை செய்தனனே.

**அநுபல்லவி.**

வற்கலையுடை - யணிந்து பொருந்து
மானதளாசனத்திருந்து
விற்கனகக் கண்டிகையுஞ்சூடி
மிகவுமுள்ளன்பு கூடி. (விக்ரம)

**சரணங்கள்.**

திருத்தமாய் மஹான்யாஸ மேகா
தசருத்திரத்துட னனேக
விருக்கொடு மகதாபிஷேக
மியற்றி முயற்சியாக. (விக்ரம) (க)

தளிருறும் வில்வ தளங்களெடுத்துச்
சகத்திர நாமங்கள் தொடுத்து
ஒளியுறுந்தூபதீபங் காட்டி
யுரிமையோட முதூட்டி. (விக்ரம) (உ)

தங்கு மின் மருமலர் சொரிந்து
சந்நிதிமூ வலம் புரிந்து
அங்கமுழுதும் படியத்தாழ்ந்து
ஆநந்தக் கடலாழ்ந்து. (விக்ரம) (ங) (கங)



## மார்க்கண்டருக்குப் பதினாறு வயதானவுடன் எம தூதன்வர அவன் அவர்கிட்ட அணுக முடியாமல் திரும்பி எமலோகம் சென்றதும் அங்குநடந்த விருத்தாந்தமும்.

**விருத்தம்.**

இறைவனையாங் கிடைவிடா தருச்சித் தேத்து
மியல்புறுமார்க் கண்டனுக்குப் பதினாறாண்டு
நிறைவுறுதலறிந் துடனே யமதூதன்கண்
ணெருப்பெழமுத் தலைச்சூலங்கரத்திலேந்திக்
கறையுடலோடெழுந் தொருங்கிப்புதல் வன்றன்னைக்
கண்டுடலம் பதைபதைத்துக்கனலைக் கிட்டும்
பொறியரவ மெனவொடுங்கிப் பெருமூச்சிட்டுப்
புழுங்கினன் அறிவிழந்து மழுங்கினனே. (கச)

### கீர்த்தனை. இராகம் - காம்போதி—அடதாளம்.

அறிவழிந்துடன்றாதன் மறையவன் றனைக்கிட்ட
வனுகவொண்ணுதென்றோட்ட மெடுத்தானே—சென்று
தறுகண மன்றனைக்கண் டடிபரவியே நாவுந்
தளர்ந்து செய்திகள் சொல்லத்தொடுத்தானே. (க)

சண்டனென்றனையேத்தித் துண்டரீகமா யெங்குஞ்
சட்டஞ் செலுத்திவந்த புகழ்போச்சே - யெம
தண்டனையென்பது மார்க் - கண்டனளவிலின்று
செம்பிற் புளியிட்டது போலாச்சே. (உ)

கறைக்கண்டனையருச்சித் திருக்குங்குமரன்றவக்
கனல்பட்டென்னுடலெங்கும் வெந்தேனே - தலை
முறைக்குமினிமேலவ னிருக்குந்திசையை நோக்க
முடியாதென்றொளித்தோடி வந்தேனே. (ங)

என்றுதா துவன்சொல்லத் தென்றிசைக்கதிபன்கண்
ணெரிபோற்சி வந்துடலம் வேர்த்தானே - யிரு
குன்றென்னும் புயந்தட்டி மன்றிலிருக்குஞ்சித்ர
குப்தனி ருவரையும்பார்த்தானே. (ச)

மார்க்கண்டன்றனக்குற்ற வயதையுரைப்பீரென
வணங்கியக் கணக்கவர் விரித்தாரே - யதி
தீர்க்கமுடனதனைப் பார்த்துச்சமனை நோக்கிச்
சிந்தைதெளிந்ததைவி வரித்தாரே. (ரு)

நீற்றொளியிறைவன்முன் சாற்றுமெண்ணிரண்டாண்டு
நேற்றுடனே சரியாய்த்தீர்ந்ததே - நிறை
யாற்றல்சேர்யமன்சிட்டை மாற்றலரிதென்றசொல்
லழிந்தவமானம் வந்துநேர்ந்ததே. (சு)

பூதிகண்டிகையணிந் தாதிசிவனைப்பூசை
புரிந்துமகிமைசிறந்தோரேனும் - நல்ல
மூதறிவுடனேந்து புலனைவென்றருந்தவ
முயன்றுமும்மையுந் துறந்தோரேனும். (எ)

எட்டுணையாகிலுமுன் னிட்டகட்டளைதன்னை
யாவராலுங்கடக்கவரிதாமே - தவச்
சிஷ்டனிவனுக்கந்த வஷ்டகுணமூர்த்திதந்
திருக்கும்வரமென்னமோ தெரியோமே. (அ) (கச)

---

# எமதர்மன் மார்க்கண்டனைப் பிடித்துவரக் காலனை ஏவல்.

### விருத்தம்.

சித்திரனுங் குப்தனுமிவ் வாறுகூறத்
தென்றிசைக்கா வலனடங்கா முனிவுகொண்டு
பைத்தலைவா ளரவெனவுங் கரித்திட்டோங்கிப்
படிறுறுங்கா லனையழைத்துப் பரக்கநோக்கி
மைத்தடங்கண் டனைவழிபா டியற்றிநெஞ்சின்
மதமிகுந்தமார்க்கண்டன் றனைப்போய்ச்சீறிக்
கைத்தலத்தா லிழுத்தெமது சபைமுன்பாகக்
காட்டென்பான் பம்பரம்போ லாட்டென்பானே. (கஎ)

### கீர்த்தனம் இராகம் - தோடி—ஆதி தாளம்.

### பல்லவி.

பிடித்துக்கொண்டென்றன்ஸபை
முன்னேவிடடா - அவனைநீ.

### அநு பல்லவி.

சடுத்தம்பேசினுலுன்கைத் - தறுபாசத்தைவீசிச்
சிறுவனைப்—(பிடி)

### சரணங்கள்.

சிவனையர்ச்சித் திட்டுளத்தி-லுவகை-முற்றியேயன் பூறிச்
சிறியவர்செம் பொன்பெற்றாற்போற்-பருமிதந்தலைக்கொண் டேறிக்
கவலையற்ற வன்வசிக்குங்-கடநகர்சென் றெதிர்த் தேறிக்
கட்டியடித் திட்டுன்புயந்-தட்டியென்புகழ் கூறிச்
சடுதியிற்—(பிடி) (க)

அதனழைத்தால்வாராம - லேதுக்கிந்தத்திண்டு மிண்டோ
சொற்கேளாக்குட் டிபோலிவ னுக்கிந்தம னமு றண்டோ
வேதன்முத லோரும்என்சொன் மீறியே நடந்த துண்டோ
விட்டேரமாகநானிட்ட கட்டளைக்கிரண் டுண்டோ
கதியொடு—(பிடி) (உ)

கைக்கதையாலடித்துடலைக்கலங்கவிழத் தாட்டி
கண்டகங்கொண்டுதுளைத்துத் துண்டரீகம்செய்து வாட்டி
வக்கிரமாகியஉன்றன்-உக்கிரரூபத்தைக் காட்டி
மங்கியலறிடமுன்கைச்-சங்கிலிதனைப் பூட்டிச்
சினமொடு—(பிடி) (ந) (கரு)

## காலன் விடைபெற்றேகி மார்க்கண்டரைக் கண்டு அணுகமுடியாமல் தன் உருவங்காட்டி நயந்து வேண்டல்.

விருத்தம்.

கருத்துழன்று தருமனிவ்வா றுரைக்கக்கேட்டுக்
காலனெம னடிபணிந்து விடைபெற்றேகித்
திருக்கடவூ ரீசர்சர ணம்புயத்தைச்
சிந்தையிலுற் றந்தரங்க பத்தியோடு
மருச்சனைசெய் தினிதிருக்குங் குமரனைக்கண்
டதிசயங்கொண் டணுகநம்மான் முடியாதென்றே
வருத்தமுற்றுத் தனதுருவங் காட்டிச்சென்று
வணங்கிநின்று நயந்துரைகள் வழங்குவானே. (கஅ)

கீர்த்தனம் இராகம் - சங்கராபரணம்—திருபுடைதாளம்.

பல்லவி.

மார்க்கண்டேயரே சொல்லக்கேளும் - மன
வருத்தங்கொள்ளாமலெனை - யாளும்.

அநுபல்லவி.

ஆர்க்கும்உயர் தென்றிசை - காக்கும்காவலனெம
னாலே யனுப்பவந்த - காலனென் பேரையா. (மார்க்கண்)

சரணங்கள்.

ஏற்றுடையோனுமக்குச் - சாற்றுமெண் ணிரண்டாண்டு
நேற்றுடனேதீர்ந்ததே - இன்றைக்கிறுதிக்
கேத்தகாலமும்நேர்ந்ததே - தலைவிதியை
மாற்றயாவராலுமாகாதே - பர
மன்தடுத்திடினும் போகாதே - எங்கள்
கூற்றுவனருகிலிப்போதே - சித்தங்
கோணுதென்னுடன் வரவேணும் தடையில்லாதே (மார்க்கண்) (க)

நிருத்தன் றனையருச்சித் - திருக்கும்செய்கையை எங்கோன்
திருச்செவியினிலோர்ந்து - உமைரக்ஷிக்கக்
கருத்தினி லருள்கூர்ந்து - அங்கு
வரச்சொன்ன மொழியைத்தள்ளாமல் - அவ
மதித்தென்னுரை தனை யெள்ளாமல் - இந்தச்
சரித்திரம் எவர்க்கும் விள்ளாமல் - தங்கள்
தாஸன் என் மீதிலா - யாஸங்கொள்ளாமல் (மார்க்கண்) (௨)

தண்டநாயகனும்மைக் - கண்டவுடனே நேரில்
அண்டிவந்தழைத்திடுவான் - தன்னுநந்தம்
கொண்டுடல் தழைத்திடுவான் - திருத்
தொண்டனென் றுவந்துரைசாற்றுவான் - மலர்
சொரிந்துபசரித்துமைப் போற்றுவான் - வானில்
அண்டர்வாழ்பதவியி லேற்றுவான் - மிக்க
அவத்தைப்படுத்தும்பிற - வித்துயரைமாற்றுவான். (மார்க்கண்) (௩) (௧௫)

## மார்க்கண்டர் காலனை இகழ்ந்து ஓடிப்போமெனல்.

### விருத்தம்.

நயமுடனிப் படிக்கால னவிலக்கேட்டு
நகைத்துடனே மார்க்கண்ட முனிவன்றானும்
பயனிலசொற் பாராட்டும் பதடியுன்றன்
பலத்தையறி வேனண்டர் பதியுமாயோ.
னயன்பதியுஞ்சிவனடியா ரளித்தபேர்க்குண்
டகம்படியா தெழுந்தோடிப் போவாயென்ன
வியந்தவனும் பயந்துடனேதெற்கே நோக்கி
மேவினன் யமனிடம்போய்க்கூவினனே. (௧௬)

## காலன் ஓடி இதனை எமனிடம் சொல்ல எமனும் மகிடவாகனத்திலாரோகணித்து எமபடர்களுடன் மார்க்கண்டரிடம் செல்லல்.

### பின்னும் விருத்தம்.

விடங்கிளர்கண் டனுக்குரிய மார்க்கண்டன்பால்
வினைக்காலன் போயவதிப் பட்டுவந்த
தடங்கலுமங் கவை யெதிர்நின் றுரைக்கச்சீறி
யந்தகன்கேட் டரி விழியிற்சிந்த நோக்கி

மடங்கலென உறுமியெம படர்கள் சூழ
மகிடவா கனமிசையா ரோகணித்தே
கடுங்கொடுமையுடன்றனது புரத்தைவிட்டுக்
கடந்திட்டான் விருதுசொல்லி நடந்திட்டானே. (உ௰)

### கீர்த்தனம். இராகம் - ஆரபி—அடதாளச்சாப்பு.

#### பல்லவி.

சண்டன்சினங்கொண்டுத் - தண்டமதாகமார்க்
கண்டன்முன் வந்தானே.

#### அநுபல்லவி.

துண்டரீகங்கொண்ட - வண்டனுடலைத்
துடிக்கச்செய்தாவி-குடிக்கிறேன் பாரென்று. (சண்டன்)

#### சரணங்கள்.

அம்பொன்மணிமகுடம் புனைந்தாபர
ணங்களும் பூட்டிக்கொண்டு - மலர்த்
தும்பையுடன்பல வம்பவிழ்மாலைகள்
தோண்மிசை சூட்டிக்கொண்டு - வல்லி
ரும்புடைவாள் சுரியுஞ்சமுதாடும்
எடுத்துக்கைதீட்டிக்கொண்டு - ஆ
டம்பரமாகவே சம்பிரதாயம்பா
ராட்டிக்கொண்டுதலை யாட்டிக்கொண்டு - கோரச் (சண்டன்) (க)

முண்டியமபடர் தொண்டு புரிந்தெதிர்
முத்துக்குடை பிடிக்க - ஓசை
மண்டிடும் பேரியா லண்டகடாகமுந்
துண்டு துண்டாய் வெடிக்கச் - செழும்
புண்டரீகன்முத லண்டர்கணெஞ்சம்
புழுங்கிக் கண்ணீர் வடிக்க - பக்கத்
தண்டியேசேனைக ணின்றெச்சரீகை
படிக்கச் சகங்கள் பொடிக்கத்துடிப்பொடு. (சண்டன்) (உ)

நேசித்தரன்றனைப் பூசித்திட்டேய்க்கும்கை
யிற்றளை பூட்டுகிறேன் - கால
பாசத்தை யென்கையால் வீசிப்பிணித்துக்
கழுத்தினில்மாட்டுகிறேன் - மிக

ஏசிப்பழித்திட்ட ரோசத்தைநெஞ்சில்வைத்
தென்திறங்காட்டுகிறேன் - முற்றும்
வாசித்தறிவின்றி மாசுற்றமூடனை
வாட்டுகிறேன்பிடித் தாட்டுகிறேனென்று. (சண்டன்) (௩) (௧௭)

## எமன்வரும் சப்தத்தைக்கேட்டு மார்க்கண்டர் சிவனிடம் அபயமிடல்.

### விருத்தம்.

அதிகமுனி வொடுமெறலி வரும்பேரோசை
யருந்தவத்தி லுயர்ந்திடுமார்க் கண்டன்கேட்டிங்
கிதுவுமொரு அதிசயந்தா னெனவேநெஞ்சி
லெண்ணியா லோசனைகள் பண்ணித்தேர்ந்து
புதுமலர்கொண் டருச்சனைசெய் திருகைகூப்பிப்
புரகரா அரகரா சம்போ வென்றே
மதிபுனைந்த வமுதகடேசனை யாசித்து
மறுகுவான் துதிபுரிந்துள் ளுருகுவானே. (௨௧)

### கீர்த்தனம் இராகம் - நாதநாமக்கிரியை—திருபுடைதாளம்.

பல்லவி.

அபயமபயஞ்செகதீசா - சம்போ
அபயமபயஞ்செகதீசா

அனுபல்லவி.

விபவப்பிரகாசகை லாஸகி வேசா. (அபயம்)

சரணங்கள்.

கரளமணிந்தசுகந்தரனே - திவ்விய
சொருபமலைமடந்தை மருவுஞ்சுந்தரனே. (அபயம்) (௧)

அகமும்புறமு முறைபவனே - உயர்
நிகமமுடிவினி லென்ஞான்றும் வாழ்பவனே. (அபயம்) (௨)

சுரநதியணிந்தமுக்கணனே - மன்றிற்
பரதநடம்புரியும் வரதசற்குணனே. (அபயம்) (௩)

தவத்தி னர்க்கருளும் தற்பரனே தொண்டர்
பவத்தை யகற்றுந்தொழில் படைத்த சங்கரனே. (அபயம்) (௪) (௧௮)

# எமன் மார்க்கண்டனைத் தன்னூர்க்கழைக்க இவர்மறுக்க அவ்விருவருக்கும் நடந்த சம்வாதமும் எமன் தன் பாசத்தை வீச எடுத்தலும் மார்க்கண்டர் அமுத லிங்கத்தைத்தழுவி முறையிடலும்.

---

விருத்தம்.

*மறையொடுமிவ் வாறுமைந்தன் றுதிக்கும்போதின்*
*மறலி யம படர்களுட னருகில்வந்து*
*திறமிகுந்த சிவபூசை வேளைபார்த்துத்*
*தீக்காடி புகுந்ததுபோற் சினந்துநோக்கி*
*யிறைவனுனக் கன்றளித்த பதினாறாண்டு*
*மின்றோடு தீர்ந்ததென்னூர்க் கெழுவாயென்ன*
*உறுதிகொண்மார்க் கண்டனதை மறுத்திடக்கேட்*
*டோருஞ்சொல்வான் சமன்கடிந்து த்தாருஞ் சொல்வானே.* (உஉ.)

விருத்தம்.

*மீண்டியெதிர் நின்றுமிரு கண்டமுனி மைந்தனை*
*வெகுண்டு சமனுறுமிநோக்கி*
*விப்பிரகு லத்ததனி லுற்பவித் துச்சகல*
*வேதமுறை யாகமங்கள்*
*விரிவொடு முணர்ந்து மன தறிவிலாவெறியர்போல்*
*விதிவலியகற்றி யிந்த*
*மேதினியி லழியா திருக்கலா மெனஅதிக*
*வீணசைகொள்ளவேண்டாம்*
*அண்டர்பணி யரனையர்ச் சிக்கின்றபலனுன*
*தரும்பவ மொழிப்பதல்லா*
*லாசுற்ற நமதுகர பாசமதைவீசினு*
*லண்டி யதனனுகுறாது*
*ஆற்றுமண வினையெண்ணி ஞலுமென் ஞலிறந்*
*தவர்கணக் கிடவொணுது*
*ஆதலா லதைமறுத் தேதயிரி யங்கொடென்*
*னருகிலினி வருவையானுல்*
*வண்டுலவு தண்டுழா யவனுலகை வேண்டினும*
*லரவனுல கைவேண்டினு*

மருவுலவு தருநிழலே வேண்டினும் தடையின்றி
மனதுவந் தருள்புரிகுவோம்
மைந்தனே வாவென விரைந்திட நகைத்துமதி
மார்க்கண்ட னவனைநோக்கி
வாய்ந்தசிவ னடியார்க ளாய்ந்தமூ வுலகினையு
மதியார்க ளுனையுமதியார்
சண்டனே தொண்டையும்வ றண்டுனது நாவது
தடித்தெரிவு கொள்ளாமலே
தடையின்றி நீவந்த நடவையைத் தேடெனத்
தணலென முனிந்தெழுந்தே
தாக்கியம பாசமதில் வீக்குதற் கவனுறத்
தனையனுள மலையாமலே
தனதிரு கரத்தினு லமுதலிங் கேசனைத்
தழுவிமுறை யிட்டனனரோ. (உ௲)

கீர்த்தனம் இராகம் - சேஞ்சுருட்டி—ஆதிதாளம்.

பல்லவி.

மிர்த்யுஞ்செயா - ஓ - மிர்த்யுஞ்செயா.

அநுபல்லவி.

மத்தமுயலகன்ப - தைத்துநடுங்கஉட
லத்திலொருபதம்ப - தித்துநடம்புரிந்த (மிர்த்யம்)

சரணங்கள்.

பத்திசோ தனைக்குநான் தரமில்லையே - சிவ
பரனே யெனக்குவேறு - தரமில்லையே - பரு
மத்தினிடைதயிர்போ - லெய்த்துடைந்து நொந்துச
லித்தென்னுளம்பரத - வித்துருகுதென்செய்வேன் (மிர்த்யம்) (க)

முந்தநீதந்தவரம் பொய்யாமலே - பூசை
முயற்சிக்கோரிடையூறு செய்யாமலே - சற்றுஞ்
சிந்தையறிவில்லாத வெந்தறுகணனை
அந்தகன்பயந்தோட வந்துதவிசெய்குவாய் (மிர்த்யம்) (உ)

பாசத்தைவீசுவேனென்-றுறுக்குறானே - யம
படர்களைக்கொண்டென்றனை யொறுக்குறானே - சிவ
கோசத்திருந்துவீரா வேசத்துடனெழுந்து
மோசச்சமனைவென்று நேசித்தெனைரெக்ஷிப்பாய். (மிர்த்யம்) (ங) (கக)

## எமன் பாசத்தைவீசி மார்க்கண்டரை இலிங்கத்தோடு சேர்த்திழுக்க சிவன் இலிங்கத்திருந்து பிரளயகால உருத்திரராயெழுந்து எமனை உதைய எமன் இறத்தல்.

விருத்தம்.

பத்திமைந்தன் மிகமுறையிட் டலறநேரிற்
படிறெமனும் பாசமதை முடுகிவீசிப்
பித்துநடுங் காதிலிங்கத் துடனே சேர்த்துப்
பிணித்துமைந்தன் றனைச்சுருக்கிட் டிழுக்க ஈசன்
சித்தமகிழ்ந் திளவலையா தரிக்கலிங்கத்
திருந்துதிடு திடுதிடெனப்ரளையகால
ருத்திரனு கிச்சினங்கொண் டெழுந்துகாலா
லுதைக்கின்றான் வீழ்ந்தெமனும் பதைக்கின்றானே. (உ௪)

இராகம் - கல்யாணி—ஆதிதாளம்.

பல்லவி.

மடிந்தானே யந்தகன் - மண்ணிற்
படிந்தானேமலைபோல்.

அனுபல்லவி.

திடங்கொள் சிவபத்தனென் - றடங்காமல் மதிகெட்டுச்
சினத்துடனே சென்றெதிர் - முனைத்திட்டகமேவிட்டு
நடுங்கக்காலபாசந்தொட் -டிடஞ்சல் செய்ததைத்தொட்டு
நடித்தெழுந்தருத்திர னிடக்காலாலுதைபட்டு. (மடிந்தானே)

சரணங்கள்.

வனத்தனிந்திரன்முதல்-அனத்தனமரர்களும்
வாய்புலர்ந்தருண்டுட லொடுங்கவும் - வளங்
கனத்தபுவியண்டங்க-ளனைத்துமதிர்ச்சியொடு
கலங்கிக் கிடுகிடென நடுங்கவும் - முனைக்
கனற்பொறியாலகில கோடிகளும் வெடிக்கக்
கயங்கித்திக்கயங்களு மயங்கிக் கலிபிடிக்க
புனற்கடலும் வறண்டிட்-டுடுக்குலமுந் துடிக்கப்
புயங்கபெட்டுமெதுங்கித் தியங்கிக்கண்ணீர் வடிக்க. (மடிந்தானே) (க)

சூழ்ந்துதனைப்பணிந்து தாழ்ந்தருகிலிருந்த
துணைக்கிங்கரர்களுயிர் பறக்கவும் - புகழ்
வாய்ந்தமைந்தனெதிரீற்-காய்ந்தெமனேறிவந்த
மகிடவாகனமும்பட் டிறக்கவும் - விசை
ஓய்ந்துதொண்டையும் நாவுங்-காய்ந்து மதிமருண்டு
உண்ணினைவுமறந்து-கண்ணொளியுமிருண்டு
வீந்த மரவட்டைபோற் சோர்ந்துடலஞ்சுருண்டு
விடவிடெனப்பதறிப் படியிற்புரண்டுருண்டு. (படிந்தானே) (௨)

அத்தனடியவர்ம-கத்துவத்தைதயுஞ்சிவ
னருளையும்வியந்து கொண் டாடியே - தவச்
சித்தருமுரகரும் வித்தியாதரர்களுந்
திரண்டெழுந்து கீதங்கள் பாடியே - மிக
நத்தியன்புடன்கைகு-வித்துத்தொழுதுமெள்ள
நயந்துள்ளமோடுருகி-யுயர்ந்த மறைகள்விள்ளக்
கர்த்தன் வரப்பிரசா-தத்தினலே முன்னுள்ள
கண்டமுமொழிந்துமார்க் கண்டனெழுந்துதுள்ள(மடிந்) (௩) (௨௰)

---

## தன்னைத் துதித்த மார்க்கண்டர் என்றும் பதனாறு வயதாயிருக்கவும் இச்சரிதையைப் படிப்போர் கேட்போர் ஸந்ததி, செல்வம், ஆயுள் முதலிய தழைத்தோங்கவும் வரமருளி ஈசன் திருவுருமறைதல்.

---

விருத்தம்.

அந்தக னிவ்வா றிறந்தன னப்பால்
அடியரிற் சிறந்தமார்க் கண்டன்
ஆதிநா லான வேதவாக் கியத்தா
லரன்புகழ் யாவையுந் தொடுத்துச்
சந்தமோ டிசைப்பா வினஞ்சொலித் துதிக்கச்
சதாசிவ னுளங்களிகூர்ந்து
தடையின்றி நாளு மெண்ணிரண் டாண்டு
தரணிவா னுலகமுள்ளளவும்

மைந்தனே வாழ்தி யெனவருள் புரிந்து
மலரடி முடிமிசை சூட்டி
மகிட்சியோ டுனது சரித்திர மதனை
வழுத்துவோ ரறிவொடுங் கேழ்ப்போர்
சந்ததி யுயர்வான் செல்வமோ டாயுள்
தழைக்கவென். றனுக்கிரகம் புரிந்து
தருநிழலமரர் மருமலர் சொரியச்
சங்கர னுருமறைந்தனனே. (உரு)

## பிறகு மார்க்கண்டர் அனேக தலத்தைத் தெரிசித்துக் கடக நகர் சென்று தாய் தந்தையரைப் பணிய அவர்கள் மகிழ்தல்.

---

பின்னும் விருத்தம்.

பனகபூ டணரிலிங்க மதனுட்சார்ந்தார்
பாசுபத மார்க்கண்ட முனிவன்றானும்
இனியசிவ தலங்களெலாம் பணிசெய்தேத்தி
யீன்றருள்தாய் தந்தையரைக் காண வேண்டி
மனதுவந்து கடகநக ரதனைமேவி
வளமிகுமாச்சி ரமதிற் புகுந்தபோது
தனையனைக்கண்டிருவர்களுமகிழ்ந்தாநந்தம்
தாங்கினருளக்கவலை நீங்கினரே. (உசு)

---

கீர்த்தனம் இராகம் - சுருட்டி—திருபுடைதாளம்.

பல்லவி.

திருக்குமரன்றனைக்கண்-டுவந்தாரேகையாற்
சேர்த்தணைத்துடனுச்சி முகந்தாரே.

அனுபல்லவி.

உருத்திரனருள்செய்த-வரத்தினாலேமிகுந்த
உரமும்பெற்றழிவிலா வாழும்பெற்றெதிர்வந்த. (திரு)

**சரணங்கள்.**

அரும்பொருளானவுன்னைப்-பிரிந்தெங்கள் மனந்தாழ்ந்து
ஐம்புலனுங்கலங்கித்-துன்பவாரியி - லாழ்ந்து
திருந்துபதினாறுண்டு-நிறைந்திடலறிந்துள்ளந்
தியங்கிப்புவியில் வீழ்ந்து - நாங்கள்
வருந்திமடிந்திடாமுன்-விரைந்தருகிலடுத்து
மனத்துயரங்களெல்லா மகலும்படிவிடுத்துப்
பொருந்தும்பரமாநந்தப்-புணரிதனில்மடுத்துப்
போற்றியாதரித்தாயென்-றேத்திமுத்தங்கொடுத்துத். (திரு) (1)

அடுத்தெமனைக்கண்டுள்ளந்-துடித்துப்பயப்பட்டதும்
அரன்றனைநினைந்தன்போ-டிரங்கிமுறையிட்டதும்
தடுத்துத்தனையாட்கொண்டங்-கிடக்காலினாலெமனைத்
தாக்கியுதைத்து விட்டதும் - பின்னும்
கடுக்கண்டரினிமையோ-டனுக்கிரகங்கள் புரிந்து
காத்தருளிசைந்ததைச் சாற்றிடவுந் தெரிந்து
வடுப்படாமல்வந்தாயே மகனேயெனப் பரிந்து
மனத்தினுக்கடங்காத-மகிட்சிக்கண்ணீர் சொரிந்து (திரு) (2)

அழற்கண்புலிக்குத்தப்பிப்-பிழைத்ததுபோலெந்தாயே
அந்தகனைவென்று சிறந்திசை மிகுந்தாயே
மழுக்கையாளுலென்றும்-வாழ்வுபெற்றிருவர்க்கும்
மகிமை மிகவுந் தந்தாயேஎன்று
தழைக்குமாசிமுறையா-லுரைத்தருமை பாராட்டித்
தகைமைபொருந்துமன்போ டகமகிழ்ந்து சீராட்டி
இழைப்பொன்னணிகளலங் கரித்துப்பணிசீ ராட்டி
இனித்தபாலடிசிற் பொற்கலத்திட்டன்புட னூட்டி. (திரு) (3) (உக)

---

பிறகு மார்க்கண்டர் காசி கைலை முதலிய தலங்கள்சென்று தவத்திற் சிறந்தவராதலும் எமனிறந்ததால் பூபார மிக, விஷ்ணுவும் பிரமனும் அரனிட முறையிட அரன் எமனை எழுப்பி விபூதி உருத்திராக்ஷம் தரித்துப் பஞ்சாக்ஷரம் செபிப்பவர் பால் அணுகாதிருக்க ஆக்ஞாபித்ததைச் சிரமேற்கொண்டு எமன் தன்னகரம் சேர்ந்து மார்க்கண்டன் சரிதையைப் படிப்போர் கேட்போரிருக்கும் திசையைக்கூட எட்டிப்பார்க்காது முன்போல் அரசு புரிதல்.

---

விருத்தம்.

மருத்வதியு மிருகண்ட முனிவன்றானு
 மார்க்கண்ட னுடன்குலவி வரிசையாகக்
கருத்துவந்து மனையில்வசித் திருந்துசின்னாள்
 கழிந்தபின்பு தந்தைதாய் விடைபெற்றேகித்
திருத்தமிகு விசுவேசர் தனைப்பூசித்துத்
 திருக்கயிலை யடைந்தரனைத் தொழுதுபோற்றிச்
சுரர்க்குரிய தலங்களெலாம் பரிவினோடு
 சுற்றினான் றவநெறியின் முற்றினானே. (உஎ)

**கீர்த்தனை. இராகம் - தோடி—ஆதிதாளம்.**

உத்தமமுனிமகன் சிவன்பெருமையை
யுணர்ந்தகல்வெளியெங்கு நிறைந்தானே - ஸதா
நித்தியதரிசனங் கொடுத்தன்பர்கள்கண்
ணினைவினுமிடைவிடா துறைந்தானே. (க)

இத்தராதலமெங்குந் தானாயிருந்
தெண்ணில் பிரமகற்பங்கண்டானே - சிவ
முத்தராஞ்சிவ - பக்தகணங்களுக்குண்
முதிர்ந்தபுகழ் படைத்துக்கொண்டானே. (உ)

எமனிறந்ததனான் மண்ணி லெண்பதினான்
கிலக்கஞ்சீவராசி மடியாமல் - அந்த
வமிதபாரம - தாகியசுமை தனைப்
புவிமடந்தை சுமக்கமுடியாமல். (௩)

வந்துமுறையிட - லுந்தெரிந்துடன்றிரு
மாலயன்சிவனடி போற்றினார் - நேரில்
அந்தகனையெழுப் - பிப்புவிபாரத்தை
யகற்றவேணுமெனச் சாற்றினார். (௫)

சிந்தைகூர்ந்தர் - னெமனையழைக்கவுயிர்
தெளிந்தவனருகில் வந்துதித்தானே - வுயர்
சந்தபாமறை - யாலரனடிபலர்
தாழ்ந்திசையொடுஞ் சொல்லித்துதித்தானே. (௬)

அத்தனவனையு - ருத்துக்கண்டிகைபூதி
யணிந்தஞ்செழுத்தைச சொலியுருவோதும - பிர
சித்தரெனதுரு - வ தரென்றவர்வசித்
திருகருந்திசை யினிலொருபோதும (௬)

அக்கிரமத்துட - னேயந்தவழியணு
காமனன்னெறியொடு மனிநீயே - யுன்
தெற்குநகர்சென்று - னக்குரியதொழிலைத்
தீர்க்கமுடன் செலுத்திவருவாயே (௭) (௨௨)

விருத்தம்.

பழுவுடையான் இலை கூறப் பிழைத்தெழுந்த
மகிட வா கனமுமெம படருஞ்சூழ
விழைவுடனின் றானடியைப் பணிந்து போற்றி
வியப்புடன்றன் னகரடைந்த நகெழுண்மார்க்கண்டன்
றலைவுறாற் சந்தைதனைப் படிப்போர் கேட்போர்
தனிப்பரம னடியரென்றத் திசைமோககாயற்
டழையபடி யதிகாரஞ் செலுத்திச செங்கோற்
பண்புற்று னுவந்துசம னின்புற்றானே. (௨௮)

மார்க்கண்டேயா சரித்திரம

முற்றுப்பெற்றது

| | | |
|---|---|---|
| ஆக விருத்தம் | .. ... | ௨௮ |
| ,, வெண்பா | .. . | ௨ |
| ,, கீர்த்தனம் | .. ... | ௨௨ |
| ஆக மொத்தம்.. | | ௫௨ |